# 23

## வாக்

சியாமா—எங்கள் நாய்—இரண்டு நாட்களாய் சரியாய்ச் சாப்பிடுவதில்லை; மந்தமாய் இருக்கிறாள். டாக்டரிடம் கொண்டு காட்டினோம். 'நத்திங் டு ஓர்ரி... டிவர்ம் பண்ணுகிறேன்... சரியாயிடும்' என்றவர், "எக்ஸஸைஸ் கொஞ்சம் கொடுத்துப் பாருங்களேன்; உடம்பு சுறுசுறுப்பாகும்" என்று சொன்னார்.

என்ன தேகப் பயிற்சி கொடுப்பது!

பந்து விட்டெறிந்து பார்த்தேன்—இரண்டு முறை எடுத்து வந்தாள். மூன்றாவது தடவை 'நீயே எடுத்துக் கொண்டுவா' என்பது போன்ற பார்வையுடன், அமர்ந்துவிட்டாள். வாக் அழைத்துப் போனால் என்ன?

நெடுஞ்சாலை இரண்டு கைகளையும் நீட்டி என் மேல் நட என்று கெஞ்சியது. இவரை அழைத்தேன்.

"நா என்னத்துக்கு உன்கூட வரணும்? எனக்கு வேலை தலைக்கு மேல இருக்கு"

"ஐய்யய்யோ—தனியாவா? ஹைவேயிலா, நா மாட்டேன். ப்ளீஸ் கம்... பத்து நிமிஷத்துலே வந்துரலாம். ப்ளீஸ்."

எனக்காகவோ, இல்லை சியாமாவுக்காகவோ தெரியாது. அவர் சம்மதித்தார். மாலை மணி ஐந்து; சியாமாவை சங்கிலியில் பிணைத்துக்கொண்டு கிளம்பினோம். வீட்டைவிட்டுச் சாலைக்கு வந்ததுமே எதிரிலுள்ள குப்பத்துக் குழந்தைகள் கண்களில் சியாமா பட்டுவிட்டாள்.

"டேய்—சேமியாடா..." நாலைந்து நிர்வாணப் பையன்கள் எங்களைப் பின்தொடர்ந்தார்கள்.

"போங்கப்பா அந்தண்டை... நாய் கடிச்சுடும்–போங்க..." நான் பையன்களை விரட்டினேன்.

"வேகமாய் நட–அவங்களிடம் என்ன பேச்சு?" என்னை அதட்டியபின் இவர் விரைவாக நடக்க முற்பட்டார்:

அவருக்குச் சரியாக என்னால் நடக்க முடியவில்லை. சியாமா வேறு நின்று மோப்பம் பார்த்து, சிறுநீர் கழித்ததினால் இவர் வேகமும் தடைப்பட்டது.

சோனியாய் இரண்டு நாய்கள் எங்கிருந்தோ வெளிப்பட்டன. ஊளையிட்ட வண்ணம் அவை இரண்டும் நெருங்கவும், சியாமா சீறிக்கொண்டு பாய்ந்தாள்.

"சியாமா, ஸ்டே–சும்மா இரு"–ம்ஹூம்–என் அதட்டலுக்குப் பலன் இல்லை. தரையில் இருந்த கல்லால் அந்த நாய்களை இவர் ஓடஓட விரட்டின பிறகே எனக்கு நிம்மதியாயிற்று.

கால் கிலோ மீட்டர் போவதற்குள் பிசாசு, பிசாசாய் லாரிகள்.

"இவ்வளவு வேகமாக என்னத்துக்காக ஓட்டறான்? யார் மேலயாவது இடிச்சா என்ன ஆகும்? கண்மண் தெரியாமப் போக வேண்டியது; ஆக்ஸிடெண்ட் ஆனதும் நிக்காம ஓடிடறது."

இவர் பதில் பேசாமல் நடந்தார்.

பாம்பு ஒன்று சாலையில் அடிபட்டுக் கிடந்தது.

"ஐயோ! இங்கே பாருங்களேன், பாம்பு! விஷப்பாம்பா, தண்ணிப்பாம்பா? தலைகிட்டே இருக்கிற செதிள் மூலமா கண்டு பிடிக்கலாம் தெரியுமா? நான் ஜூவாலஜிலே படிச்சிருக்கேன்."

இரண்டு சண்டி மாடுகளை ஒருவன் குட்டையில் குளிப்பாட்டினது பார்க்க தமாஷாக இருந்தது. அந்தப் பக்கமாய் ஒரு ஆணும், பெண்ணும் சேற்றை இறைத்துக் கொண்டிருந்தனர்.

"அவா என்ன பண்ணறா, எதுக்கு சேறு தண்ணியை இறைக்கறா?" இவரிடம் கேட்டேன்; 'தெரியாது' என்றார். அவர்களிடம் கேட்டால் என்ன? கேட்டேன்...

கெண்டை மீன் பிடிக்கிறோம் என்றார்கள்.

"ப்ளீஸ்... ப்ளீஸ்... நின்று பார்க்கலாமே... மீன் பிடிக்கிறது புது தினுசா இல்லே?"

சற்று நின்று பார்த்துவிட்டு மேலே நடந்தோம்.

நான் ஒவ்வொரு காட்சியாக நின்று அனுபவித்து ரசித்து முடித்தபின் வீட்டுக்குத் திரும்பினோம்.

மணி ஆறேகால்—

“வாட் எ வொண்டர்ஃபுல் வாக்”

இவர் பதில் பேசவில்லை...

“தினமும் இந்த நேரத்துக்கே போயிட்டு வந்துடுவோம்—என்ன?” என்றேன் தொடர்ந்து.

நின்று என்னை இவர் உற்றுப் பார்த்தார். பிறகு “நான் உன்னோட வாக் இனிமே வரமாட்டேன்—நீ வேணா தனியா போ” என்று விரைப்பாகச் சொல்லிவிட்டுத் தன் அறைக்குப் போய் விட்டார்.

இவருக்கு என்னாயிற்று? எதுக்காக இத்தனை கோபம்?

ஒருத்தொருத்தன் தன் பெண்டாட்டியை எப்படித் தலையில் வைத்துக்கொண்டு தாங்குகிறான்; இவர் எனக்காகப் பத்தே பத்து நிமிஷத்துக்கு வாக் வரக்கூட மறுக்கிறாரே! ஏன்?

எனக்குப் புரியவில்லை!

– குங்குமம், 1978